5-1

சிவமயம்

# திருக்கயிலை

## தெய்வீக மாதப் பத்திரிகை

குன்று 9 | 1976 ஆகஸ்டு | படி 8





கோர்வைமாவட்டம் கூனம்பட்டியில்

## ஸ்ரீ மாணிக்கவாசகர் குருபூஜைவிழா

1-7-76 அன்று மிக சிறப்புடன்
நடைபெற்றது

ஆசிரியர்: திருக்கயிலை
96, சோலையப்ப முதலியார் தெரு,
கும்பகோணம், தஞ்சாவூர் மாவட்டம்.



உ

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ கற்பக விநாயகர் திருக்கோயில்

## சோலையப்பமுதலியார் தெரு

## கும்பகோணம்.

நாளது நள-ஞ ஆவணி-மீ 27உ (12—9—76)

ஞாயிற்றுக்கிழமை காலை மணி 10-30க்குமேல் 11க்குள்

விருச்சிக லெக்னத்தில்

# மஹா கும்பாபிஷேகம்

அன்பர்கள் அனைவரும் கும்பாபிஷேகவிழாவில் கலந்து கொண்டு சிறப்பித்து ஸ்ரீ கற்பக விநாயகர் திருவருளைப் பெற்றுய்யுமாறு வேண்டுகிறோம்

இங்ஙனம்

| | |
|---|---|
| கும்பாபிஷேகக் குழுவினர் | R, ராதாகிருஷ்ணன், M.A. |
| சோலையப்பமுதலியார் தெரு | பரம்பரை தர்ம கர்த்தா |
| கும்பகோணம். | தேசீயக்கல்லூரி, திருச்சி-1 |

முருகமணி, K. Y. சுந்தரேச குருக்கள்

ஷ ஆலய அர்ச்சகர் & ஆசிரியர் திருக்கயிலை, கும்பகோணம்

# சிவ தரிசனம்

திரு ஆர். இலக்குமணன் அவர்கள்
உதவி மணியம்:
ஸ்ரீ கபாலீஸ்வரர் திருக்கோயில், சென்னை-4,

## திருமயிலை கபாலீச்சரம்



அழகிய உயர்ந்த இல்லங்களையும், நீண்ட பெரும் மாடவீதிகளையும் கொண்டு சென்னைமாநகரத்தின் இதய கமலமாகத் திகழ்கின்ற மயிலை நகரம் முன்பொருகால் வானளாவ உயர்ந்த மாடமாளிகைகளையும், கூடகோபுரங்களையுங்கொண்டு, அக்கூட கோபுரங்களின் தாழ்வாரங்களில் வேள்வித்தீயிலிருந்து கிளம்பிய நறுமணம் கமழும் புகையானது படிந்து நிற்க, அது காண்போர் உள்ளத்தில் "ஆக விண்நகரமோ" என்று வியந்து பாராட்டும் அளவிற்கு அழகுபடைத்ததாக இருந்தது

"ஓம்" என்னும் மந்திரத்தை இடைவிடாது உச்சரிக்கின்ற சிவநேயச் செல்வர்களைத் தம்பால் கொண்ட கயிலைமாநகர் போன்று ஓங்கார இசையை இடைவிடாது ஒலிக்கின்ற நீலக்கடலினைத் தம்பால் கொண்டுள்ள மயிலை நகரத்தின்மத்தியிலே மதில்களால் சூழப்பட்ட அழகிய சிற்றம்பலத்தில் இறைவன் கபாலீச்வரன் நடுநாயகமாக விளங்குகின்ருன் மயிலைமாநகரம் மாருமாண்பு பெறவேண்டும் என எண்ணம்கொண்ட இறைவன், தக்க தருணம் எதிர்பார்த்திருக்குங்கால், மயிலின் ஆட்டத்தில்

மனதைப்பறிகொடுத்த மகேசுவரியை நோக்கி, "தேவி! மாடமாளிகைகளையும், கூட கோபுரங்களையுங் கொண்டும், மணங்கமழும் மல்லிகைப் பந்தல்களால் சூழப்பட்டதுமான மயிலார்ப்பு என்னும் திருத்தலத்திலே ஆரவாரிக்கும் மயில் கூட்டத்திலே அழகு மயிலாக அவதரிப்பாயாக! நாமும் தக்க தருணத்தில் உன்னை அடைந்து ஏற்றுக்கொள்வோம்'' என்றருளினார். அம்மையும் தம் மனதை அலையவிட்டதற்கு தக்க தண்டனை இதுதான் என்று தன்னைத்தேற்றிக் கொண்டு மயிலாக வடிவெடுத்து மயிலார்ப்புக்கு வந்தடைந்தாள் மயில்கள் ஆர்ப்பரிக்கும் மயிலார்ப்பு நகரினிலே அன்னை, மகேசுவரனை இலிங்க வடிவிலே மயிலாக இருந்து அருச்சித்து வழிப்பட்டாள். நான் என்னும் அகந்தை நான்முகனுக்கும் உண்டு, இறைவியைப்பிரிந்த இறைவனும் சக்தியை இழந்த சிவமாக விளங்கவும், அதைப்பயன்படுத்திக் கொண்டு நான்முகனும் தனக்கு நிகர் யாருமில்லை. சங்கரனுக்கும் ஐந்துதலை, தனக்கும் ஐந்துதலை. சங்கரன் சக்தியற்றவனாக இருக்கின்றான். தானே சர்வசக்திகளும் பெற்றிப்பதால் "நானே இறைவன், நானே தலைவன்'' என்னும் இறுமாப்புடன் இருக்குங்கால் இறைவனும் பிரமனது ஐந்து தலைகளிலே ஒன்றைக் கொய்து அவனது அகங்காரத்தை நீக்கி உண்மையை உணரச்செய்தார். அவ்வாறு கொய்யப்பட்ட மண்டை ஓட்டினைத் தம்கையில் பிச்சைப் பாத்திரமாக ஏந்தி மண்ணுலகில் இரவலனாகத் தோன்றி மயிலையை வந்தடைந்தார். இறைவனை இரவலனாகக்கண்ட அன்னையும் ஆரவாரத்துடன் ஆர்பரித்து, ஆண்டவனை வழிபட்டார். அம்மை

யின் அன்பிலே ஆண்டவன் அகமகிழ்ந்து, காட்சி யளித்து அருள்புரிந்தார். அன்னையின் அருச்சனை யில் அகமகிழ்ந்த ஆண்டவன் அன்னையை நோக்கி "மயிலாக உருவெடுத்து வழிபட்ட நீயும், உன் மனங்குளிர வேண்டிய வரங்களைக் கேட்பாயாக!" என்றார். இதுகேட்ட அன்னையும், "அண்ணலே தங் களின் அருகிலிருக்கும் அருந்தவப் பேற்றினைவிட வேறு பேறுமுளதோ, இருப்பினும் பெண் என்ற பேதமையால் தங்களிடம் முப்பெரும் வரங்களை யான் கேட்க விழைகின்றேன். தாங்கள் அருள் கூர்ந்து அவற்றை அளிக்க வேண்டுகிறேன். முதலாவதாக தாங்கள் எனக்கு கபாலமேந்திக் காட்சியளித்ததைப் போன்று இத்தலத்திற்கு வருகின்ற அனைவருக்கும் இத்திருக்கோலத்திலேயே காட்சியளிக்கவேண்டும். இரண்டாவதாகத் தங்களை வழிபடவருவோர்க்குக் கற்பக விருட்சத்தைப் போன்று வேண்டுவனவெல் லாம் அளிக்கின்ற சக்தியையும் அருளி என்னைக் கற்பகம் என்னும் திருநாமத்துடன் விளங்க அருள் புரியவேண்டும். மூன்றாவதாக மயிலாக யான் தங் களை வழிபட்டதாலும் கபாலியாகத் தாங்கள் அருள் புரிந்ததாலும், இத்திருத்ததலம் திருமயிலைக் கபாலீச்சரம் என்னும் திருப்பெயர் தாங்கி விளங்கவேண்டும்" என் றனள். இறைவனும் இறைவியினுடைய வேண்டு கோள்கேட்டு இன்புற்று அன்று முதல் இறைவன் கபாலியாகவும், இறைவி கற்பகமாகவும் இத்தலத் திலிருந்து வழிபடும் அடியார்களை ஆட்கொண்டு வருகின்றனர். இத்திருத்தலம் இன்றும் திருமயிலைக் கபாலிச்சரமென்னும் திருப்பெயருடன் விளங்குகிறது



உ

திருச்சிற்றம்பலம்

# பெரியபுராணம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ நா. சரவணமாணிக்கவாசக சுவாமிகள் அவர்கள்
கூனம்பட்டி, (கோவை மாவட்டம்.)



## 11. குங்குலியகலயநாயனார்.

சோழநாட்டில் காலனைக் காலால் உதைத்த கடவுள்எழுந்தருளியிருக்கும் திருத்தலம் திருக்கடவூர் என்னும் சிதஸ்தலமாகும். இத்தலத்திலே குங்குலியக் கலயனார் என்னும் பெரியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் முப்பிரிநூல் அணிந்த அந்தணர் குலத்தில் பிறந்தவர். சிவபெருமானுடைய திருவடிகளை நாடோறும் வணங்குபவர்; நல்லொழுக்கத்தில் தலை சிறந்தவர், மார்க்கண்டேய முனிவருக்காக யமனை உதைத்தருளிய அமிர்தகடேசராகிய சிவபெருமானுக்கு மணமிக்க குங்குலியதூபம் இடுகின்றதிருத் தொண்டு புரிபவர், ஆதலால் அவரை யாவரும் "குங்குலியக் கலயர்" என்று அழைத்துவந்தனர்.

குங்குலியக்கலயனார் சிவத்தொண்டாற்றி வரும் போது, இறைவன் கலயனாரின் பெருமையை உலகத்திற்கு எடுத்துக்காட்டுவதற்கு எண்ணி அவரை வறுமையடையும்படிசெய்தார். வறுமையுற்றபோதும் எம்பெருமானுக்குச் செய்யவேண்டிய குங்குலிய தூப

திருப்பணியைத் தவருது நடத்திவந்தார் அவருடை வறுமை மேன் மேலும் அதிகரித்து வந்தது. தன்னுடைய நிலங்கள் அனைத்தையும் விற்ருர்; பொருகள் யாவற்றையும் இழந்தார்; கலியனுரின் உற்ருரும், மக்களும் வறுமையால் மிக வருந்தினர். உணவுக்குரிய சாதனங்கள் எதுவுமின்றி மக்கள் மனைவி முதலானேர் பட்டினிகிடந்து வருந்தினுர்கள். கலியனுரின் மனைவியார் தமது கணவராகிய கலயனுரை அழைத்து அவர்கையில் தம்முடைய மாங்கல்யம் பொருந்திய தாலியைக்கழற்றிக்கொடுத்து அதனை விற்று நெல்தானியங்கள் வாங்கிவருமாறு கூறினுர். கலயநாயனுர் அதனைப்பெற்றுக்கொண்டுகடைவீதிக்குச்சென்ருர்,

அதுசமயம் ஒருவணிகன் குங்குலியப்பொதியினை எதிரே கொண்டுவந்தான். அதனைப்பார்த்த நாயனுர் ‘‘இது என்ன பொதி’’ என்று கேட்டார். ‘‘இது குங்குலியப்பொதி’’ என்று வணிகன் கூறினுன். உடனே நாயனுர் முகமலர்த்து ‘‘இறைவனுக்கேற்ற மணம்’’ பொருந்திய குங்குலியம் இதுவானுல் நான் இன்று பெறும் பேறுபெற்றேன்; இதை விட வேறு நல்ல பேறுண்டோ? இதைக்காட்டிலும் பெறுவதற்கு வேறு என்ன இருக்கிறது? என்று துணிவுகொண்டு வணிகனை நோக்கி ‘‘ஐயா நான் உமக்குப் பொன்னைத்தருகிறேன், நீர் இக்குங்குலியத்தைக் கொடுப்பீராக!’’ என்ருர். நீர் எனக்கு எவ்வளவு பொன் கொடுக்க இசைந்துள்ளீர்கள் என்று வணிகன் கேட்டான். கலயனுர் தம்கையிலிருந்ததாலியை வணிகனிடம் கொடுத்தார். வணிகன் அதனைப்பெற்றுக்கொண்டு குங்கு

லியப்பொதியை நாயனரிடம் கொடுத்தான். நாய ஞர் பெருமகிழ்வுடன் அதனைப்பெற்று வீரட்டானத் திருக்கோயிலை அடைந்து சிவபெருமானுடைய வழி பாட்டுக்குரிய பொருள்கள் வைத்திருக்கும் பண்டா ரத்திலே குங்குலியத்தைச் சேமித்துவைத்து, மனத் தில் பேரன்பு பொங்க எம்பெருமானுக்கு குங்குலிய தூபத்தொண்டுபுரிந்து சிவசிந்தனையுடன் அங்கேயே தங்கியிருந்தார்.

அன்றிரவு மனைவியாரும், மக்களும் பசி மிகுதி யால்வருந்தி அயர்ந்து தூங்கினர். அப்போது இறை வன் திருவருளினாலே குபேரன் தனது பெருஞ்செல் வத்தை கலஞரின் வீட்டிலே நிறைத்து கலயனரது திருமனைமுழுவதும் பொற்குவியலும், தெற்குவியலும் பிறவளங்களுமாக ஆக்கிவைத்தான் கலயனரின் மனைவியின் கனவில் இறைவன் தோன்றி வீட்டில் செல்வம் நிறைந்துள்ளதை உணர்த்தியருளி ஞர். அம்மையார் துயில் நீங்கி எழுந்து, தாம் கன வில் கண்ட பலவகைச் செல்வங்கள் தம் வீட்டில் நிறைந்திருப்பதைக்கண்டு மகிழ்ந்தார். சிவபெருமா னின் திருவருளை நினைத்து வணங்கித் துதித்து, கண வருக்கு உணவு சமைக்க எண்ணி பாகசாலைக்கு சென்ருர்.

காலனைக் காலால் உதைத்த கடவுள், திருக்கோ யில் குங்குலியக்கலயனர் அறியும்படி அசரீரீ வாக் கால் ''நீ மிகப்பசித்தாய்; உன்னுடைய வீட்டிற்குச் சென்று பாலுடன் கலந்த இனிய உணவை உண்டு பசித்துன்பத்தை ஒழிப்பாயாக!'' என்று திருவாய்

மலர்ந்தருளினுர்! கலயனுர் இறைவன் திருவருளைப் பெற்று தமது வீட்டிற்குச் சென்ருர். தம்வீட்டில் பெரிய நிதிக்குவியல்களோடு ஏனையச்செல்வங்க்ள் நிறைந்திருப்பதைக் கண்டார். தம்மனைவியாரைப் பார்த்து இச்செல்வங்கள் எவ்வாறு உண்டாயின? என்று கேட்டார் அம்மையார் நீலகண்டராகிய எம் பெருமான் திருவருள் புரிய இச்செல்வம் வந்தது என்று கூறினுர். கலியனுர் பெருஞ்செல்வச்சிறப்பை நோக்கி "என்னையும் ஆட்கொள்ள எம்பெருமான் திருவருளை என்னென்று கூறுவது?" என்று கைகூப்பித்தொழுதார்.

குங்குலியக்கலய நாயனுர் சிவபெருமானுக்கும், சிவனடியார்களுக்கும் ஏற்றவாறு பற்பல திருப்பணி பல புரிந்து இறைவனது திருவடிநிழலை அடைந்தார். அவருடைய திருநட்சத்திரம் ஆவணி மூலம் ஆகும்.

"கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன்"

---

வட ஆற்காடுமாவட்டம் ஆரணி கோட்டை காவலர்விடுதி ஸ்ரீ வேம்புலிஅம்மன் ஆலயத்தில் நூதனமாக ஸ்ரீ வள்ளிதேவ சேனு ஸமேத ஸ்ரீ சுப்ரமணியஸ்வாமி ஆலய அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேகம் 8—7—76அன்று மிக விமரிசையாக நடைபெற்றது, ஆரணி V.D, சம்பந்தகுருக்கள் சிவாகமவிதிப் படி பல சிவாச்சாரியார்களைத் தருவித்து விசேஷ பூஜைகளுடன் கும்பாபிஷேகத்தை நடத்தியது மிகவும் போற்றக்கூடியதாகும் அறங்காவலர்கள் V. M. வரதராஜமுதலியாரும் கோவிந்தசாமி கவுண்டரும் வந்திருந்தோர்களை வரவேற்று உபசரித்தார்கள்.

    

# செய்திகள்

கோவைமாவட்டம் சித்தோடு A. K. ராஜாமணிக்குருக்கள் குமாரி சௌ: ஜானகி என்கிற செல்வநாயகிக்கும் தென்சேரிமலை A. V. பாலசுப்ரமண்யக் குருக்கள் குமாரர் சிர: ஆலாலசுந்தரத்திற்கும் 8—7—76அன்று சித்தோட்டில் விவாஹம் மிக சிறப்புடன் நடைப்பெற்றது. உறவினர்களும் அன்பர்களும் வந்திருந்து விவாஹத்தைச் சிறப்பித்தார்கள்.

— வாழ்க தம்பதிகள்.

   

திருச்சிமாவட்டம் ஜெயங்கொண்டம் திருவருள்தவநெறி மன்றத்தின் 20-வது ஆண்டு நிறைவுவிழா 27—6—76 முதல் 5—7—76முடிய மிக சிப்புடன் நடந்தேரியது. திருமுருக: கிருபானந்தவாரியார் சுவாமிகள், திருநெல்வேலி ராஜம் - சாரநாதன், நாகர்கோயில் செல்வி: மங்கையர்க்கரசி ஆகியோர்கள் முறையே சொற்பொழிவு நிகழ்த்தினுர்கள். மன்றத்தின் உறுப்பினர்கள் அனைவரும் வந்திருந்தோர்கள் அனைவரையும் வரவேற்று, விவாவைச் சிறப்புடன் நடத்தினுர்கள்.

   

கோவைமாவட்டம் ஊத்துக்குளி ஸ்ரீகதித்தமலை ஆண்டவருக்கு 7-வது ஆண்டு லட்சார்ச்சனை விழா 7—7—76 முதல் 9—7—76முடிய மிக சிறப்புடன் நடைபெற்றது. லட்சார்ச்சனை விழாவில் திரு: மு. தெண்டபாணி அவர்கள் வள்ளித்திருமணம் என்பது பற்றி சொற்பொழிவு நிகழ்த்தி

ஞர்கள். ஆலய அர்ச்சகர் டாக்டர் U.V. நல்ல சுப்ரமணிய குருக்கள் ஸ்ரீ முருகப்பெருமானுக்கு சிறப்பான முறையில் அபிஷேக ஆராதனைகள் செய்வித்தது மிகவும் பாராட்டுக் குறியயனவாகும்!

   

வட ஆற்காடு மாவட்டம் வேலூா ஸ்ரீ சோலாபுரி அம்மன் கோவிலுக்கு 23—6—76ல் காஞ்சி காமகோடி ஜெகத்குரு ஸ்ரீ ஜெயேந்திரசரஸ்வதி சுவாமிகள் அவர்கள் விஜயம்செய் துள்ளார்கள். தெய்வீகப்பேரவைத்தலைவர் திரு: V. J. சத்யநாராயணா அவர்கள் ஸ்ரீ சுவாமிகளை வரவேற்ருர்கள் ஆலய அர்ச்சகர் சிவஸ்ரீ M. வெங்கட்ராம குருக்கள் ஸ்ரீ அம்பாளுக்கு விசேஷமாக அபிஷேக ஆராதனைகளைச் செய் வித்து ஸ்ரீ ஆச்சாரியாளுக்கு தரிசனம் செய்துவைத்தார் கள். பின்பு ஸ்ரீ ஆச்சாரியாள் மக்களுக்கு அறிவுரை நிகழ்த் திஞர்கள். வேலூர் ஆடிட்டர்கள் திரு. V.S. ஆத்மநாதன் அவர்களும், K. குப்புசாமி அவர்களும் ஸ்ரீ காஞ்சி புதுப் பெரியவாளை கல்யாணமண்டபத்திற்கு ஊர்வலமாக அழைத்து வந்தார்கள். ஸ்ரீ ஆச்சாரியாள் அவ்விடம் 2தினங் கள் தங்கியிருந்து விசேஷ பூஜைகளைச்செய்து மககளுக்கு பிரசாதம் அருளாசி முதலானவைகளை வழங்கிஞர்கள். பின்பு ஸ்ரீ ஆச்சார்யாள் திருவண்ணுமலைக்கு பாதயாத்தி யுடன் புறப்பட்டுச் சென்ருர்.

    

தென்ஞர்காடு மாவட்டம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ பாட லேஸ்வரர்திருக்கோயிலில் வைகாசிப்பெருவிழா 2—6—76 முதல் 15—6—76வரையில் மிகசிறப்புடன் நடைபெற்றது. காலை, மாலை இருவேளைகளிலும் ஸ்ரீ பெரியநாயகி அம்மை

யாருடன் ஸ்ரீ பாடலீஸ்வரப்பெருமான் வீதியுலாக்காட்சி சிறப்புடன் நடந்தேறியது. 14—6—76 அன்று இரவு தெப் போற்சவம் கண்கொள்ளாக்காட்சியாக இருந்தது. இந் நிகழ்ச்சிகள் யாவும் மிக சிறப்புடன் நடந்தேற ஆலய நிர் வாக அதிகாரி திரு சுவாமி வெங்கடாசலம் B. Com, FICA. அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி மிகவும் பாராட்டுக்குரியவையாகும்!.

   

கோவைமாவட்டம் சிவன்மலேயில் 2—8—76 ஞாயிற்றுக் கிழமையன்று ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் 22வது குருபூஜை விழா சிறப்புடன் நடைபெற ஏற்பாடாகிவருகிறது. விழாவிற்கு கூனம்பட்டி ஸ்ரீ-ல-ஸ்ரீ நா. சரவண மாணிக்கவாசகசுவாமிகள் அவர்கள் அருளுரை வழங்கவும், பழயகோட்டை பட்டக்காரர் உயர்திரு: N. நல்லசேஞதிபதி சர்கரைமன்ருடியார் அவர்கள் தலேவராகவும், பெரியபட்டி வித்வான் மு தண்டபாணிசிவம் அவர்கள் ''சிவஉபதேசம்'' என்ற தலேப்பிலும். அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்கள் '' நம்பி ஆரூர் '' என்ற தலேப்பிலும் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்த இசைந்துள்ளார்கள். அன்பர்கள் அனேவரும் விழா வில் கலந்துகொண்டு ஸ்ரீ ஆலாலசுந்தரர் திருவருளுக்குப் பாத் திரர்களாகும்படி கமிட்டினர் கேட்டுக்கொள்கிருர்கள்.

   

கோவைமாவட்டம் கூனம்பட்டி ஸ்ரீ மாணிக்கவாசகர் திரு மடாலயத்தில் 1—7—76 அன்று ஸ்ரீ மாணிக்கவாசகர் குரு பூஜைவிழா மிக சிறப்புடன் நடைபெற்றது. ஸ்ரீமடத்தின் குரு மஹா ஸன்னிதானம் சிவ ஸ்ரீ: நா. சரவணமாணிக்கவாசக சுவாமிகள் அவர்கள் ஸ்ரீ மணிவாசகப்பெருமானுக்கு அபிஷேக ஆராதனேகள் செய்வித்து அன்பர்களுக்கு திருவருள் பிரஸாதம் வழங்கியருளினுர்கள். இளவரசு ஸ்ரீராஜலிங்க மாணிக்கவாசக

சுவாமிகள் வந்திருந்தோர்கள் அனைவரையும் வரவேற்று உபசரித்தார்கள். பிற்பகல் மஹேஸ்வர பூஜையும், கமிட்டிக் கூட்டமும் நடைபெற்றது.

   

வட ஆற்காடுமாவட்டம் ஆம்பூர் ஸ்ரீ நாகேஸ்வரஸ்வாமி ஆலய அர்ச்சகர் சிவஸ்ரீ A. N. G. செங்கல்வராய குருக்கள் உலக க்ஷேமார்த்தத்தின் பொருட்டு 2—5—76 முதல் 13—6—76முடிய காசி, கயா, ஹரித்துவார், ரிஷிகேசம் முதலிய இடங்களுக்கு தல யாத்திரை செய்துவிட்டு 11—7—76 அன்று ஆம்பூரில் ஸ்ரீ நாகேஸ்வரஸ்வாமிக்கு மஹன்யாஸபூர்வகமாய் ஏகாதசருத்ராபிஷேகமும், காசி கங்காபிஷேமமும், பிற்பகல் பிரும்மணசந்தர்ப்பணையும் நடத்தினார்கள். அன்பர்கள் அனைவரும் வந்திருந்து சிறப்பித்து. சிவாச்சாரியாரின் நற்செயல்களைப்பாராட்டியது மிகவும் போற்றற்குரியதாகும்.

   

தஞ்சைமாவட்டம் பூதலூர் சிவஸ்ரீ S. நாராயணஸாமிசிவாச்சாரியார் அவர்களுக்கு 19—5—76அன்று பூதலூரில் ஸ்ரீஆபத்ஸஹாயேஸ்வரஸ்வாமி ஸன்னதியில் ஆசார்யபிஷேகப் பெருவிழா மிகசிறப்புடன் நடந்தேறியது சிவாச்சார்யபெருமக்களும், மற்றும் அன்பர்களும் வந்திருந்து விழாவைச் சிறப்பித்தார்கள்,

   

புதுக்கோட்டை மாவட்டம் திருக்கோகர்ணம் ஸ்ரீகோகர்ணேஸ்வரஸ்வாமி ஆலய அர்ச்சகர் ஸ்ரீகணேசகுருக்களுக்கும், ஈரோடு கருங்கல்பாளையம் ஸ்ரீசோமீஸ்வரஸ்வாமி ஆலய அர்ச்சகர் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி குருக்களுக்கும் 8—7—76அன்று திருக்கோகர்ணம் ஸ்ரீ கோகர்ணேஸ்வரஸ்வாமி சன்னதியில் ஆசார்ய அபிஷேகப் பெருவிழா மிக சிறப்புடன் நடந்தேறியது. பல சிவாச்சாரியப்பெருமக்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

கோவைமாவட்டம் பூந்துறை ஸ்ரீ பாகம்பிரியாள்ஸமேத ஸ்ரீபுஷ்பவனேஸ்வரஸ்வாமி ஆலய அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேகம் 4—7—76 ஞாயிற்றுக்கிழமையன்று அதிவிமரிசையாக நடைபெற்றது. விழாக்கமிட்டியினர் வந்திருந்தோர் அனைவர்களையும் வரவேற்று உபசரித்தார்கள். ஆலய அர்ச்சகர் சிவஸ்ரீ N. செல்வரெத்தின குருக்கள் தலைமையில் ஆரூர் S. வைத்தியநாத சிவாச்சாரியார், காஞ்சிபுரம் K. ராஜப்பா சிவாச்சாரியார் மற்றும் பலரும் சிவாகமத்தின் பெருமைகளை எடுத்துக்கூறினார்கள். மேலும் பொத்தனூர்பிரசங்கமணி V.இராமசாமி அய்யர், தேவகோட்டை பாலகவி V. இராமநாதன் செட்டியார் முதலானோர்கள் சிறப்புச்சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். ஷ கும்பாபிஷேகத்திற்கு 50திற்கு மேற்பட்ட சிவாச்சாரியார்களை, பாண்டமங்கலம் P. K. சுந்தரேசக்குருக்கள் அவர்கள் தருவித்து மிகவும் உயர்ந்த முறையில் சிவாகமவிதிப்படி வேள்விகளை நடத்தி கும்பாபிஷேகத்தை செய்வித்தார்கள். சிவாச்சாரியப் பெருமக்களின் சார்பாக ஸர்வஸாதகம் P. K. சுந்தரேசக்குருக்களுக்குப் பாராட்டுவிழா நடத்தியது மிகவும் போற்றற்குரியனவாகும்!.

   

கும்பகோணம் பேட்டை பொய்யாத பிள்ளையார் சன்னதி K. RM. S. சொக்கலிங்கம்செட்டியார் அவர்கள் குமாரி செல்வி: சுசீலாவுக்கும், கும்பகோணம் மஹாதளம்பேட்டை A. மகாலிங்கம் செட்டியார் அவர்கள் குமாரர் செல்வன் M. கதிரேசன் B.A.,க்கும் 4—7—76 அன்று குடந்தை பொய்யாதபிள்ளையார் சன்னதியில் முஹூர்த்தம் மிக சிறப்புடன் நடைபெற்றது. அன்பர்களும், உறவினர்களும் வந்திருந்து திருமணத்தைச் சிறப்பித்தார்கள்.

— வாழ்க தம்பதிகள் !

   

தஞ்சைமாவட்டம் திருவாலம்பொழி T. S. வெங்கட்ராம அய்யா குமாரனும், ஈஸ்வரன் தட்டெழுத்துப் பயிற்சி நிலைய பிரின்ஸிபால் திரு. V. காமேஸ்வரன் அவர்களுடைய சகோதரருமான சிர: சிவசுப்ரமணியனுக்கும் மாயூரம் தாலுக்கா

கோமல் கர்ணம் திரு. M. N ராமமூர்த்தி அய்யர் அவர்களுடைய குமாரி சௌ: பிரேமா என்கிற மீனுக்ஷிக்கும் 8-7-76 அன்று கோமலில் விவாஹம் மிகச்சிறப்புடன் நடைபெற்றது. மறுநாள் 9—7—76 அன்று குடந்தை வரவேற்பு விழாவில் நாதஸ்வர இசைமணி V. குஞ்சிதபாதம் பிள்ளை & பார்ட்டியாரின் நாதஸ்வர இன்னிசை சிறப்புடன் நடைபெற்றது. வந்திருந்தோர்கள் அனைவரையும் V. காமேஸ்வரன் வரவேற்று உபசரித்தார்கள். — வாழ்க தம்பதிகள் !

★ ★ ★ ★

தஞ்சை மாவட்டம் தேவூர் K. சுப்ரமணிய குருக்கள் குமாரி சௌ: சீதாலெக்ஷிமிக்கும், மீமிசல் பாலசுப்ரமணிய குருக்கள் குமாரர் சிர: சிங்காரவேலனுக்கும் 19—4—76 அன்று தேவூரில் விவாஹம் மிகசிறப்புடன் நடைபெற்றது. ஏராளமான அன்பர்களும், உறவினர்களும் வந்திருந்து திருமணத்தைச்சிறப்பித்தார்கள். — வாழ்க தம்பதிகள் !

★ ★ ★ ★ ★

வட ஆற்காடுமாவட்டம் திருவண்ணுமலை முன்னுள் நகரமன்ற உறுப்பினர் திரு. T. K. மணிக்குருக்கள அவர்கள் குமாரி சௌ: கலாவதிக்கும் சென்னைமைலாப்பூர் நாகராஜ குருக்கள் குமாரர் சிர: கௌரீசங்கருக்கும் (கரூர் வைஸ்யா பாங்கு, சென்னை) 6—6—76 அன்று திருவண்ணுமலையில் விவாஹம் மிக சிறப்புடன் நடந்தேறியது. தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் கமிட்டித்தலைவர் உயர்திரு. P. ராமச்சந்திரன் M A., அவர்கள் வருகைதந்து திருமணத்தைச்சிறப்பித்தார்கள். — வாழ்க தம்பதிகள்!

★ ★ ★ ★

தஞ்சை மாவட்டம் மாயூரம் T. பாலகிருஷ்ண உடையார் தௌஹித்திரியும், மங்கநல்லூர் T. பாலச்சந்திர உடையார் குமாரத்தியுமான செல்வி: மாலதிக்கும், பரியலூர் R. முத்து குமாரசாமி உடையார் குமாரர் செல்வன்: ராஜன் B. E க்கும், மாயூரம் காவேரி நகர் குமாரசாமி உடையார் பள்ளியில் 16—6—76 அன்று திருமணம் மிக சிறப்பாக நடைபெற்றது. திருமண விழாவில் தருமபுரம் தண்டபாணி தேசிகர் திருமுறை இன்னிசை வழங்கினுர்கள், வித்துவான் V S. குருசாமி தேசிகர் அவர்கள் வாழ்த்துரை வழங்கினுர்கள். அன்பர்களும், உறவினர்களும், திருமணத்திற்கு வந்திருந்து சிறப்பித்தார்கள். — வாழ்க மணமக்கள்!

   

தஞ்சைமாவட்டம் க்ஷேத்திரபாலபுரம் S. வெங்கடேச சிவாச்சாரியார் குமாரர் சிர: சேதுராமனுக்கும் கீழமாங்குடி G. சங்கர சிவாச்சாரியார் குமாரி சௌ: பானுமதிக்கும் 24—5—76 திங்கட்கிழமையன்று கீழமாங்குடியில் விவாஹ முஹூர்த்தம் மிக சிறப்பாக நடந்தேறியது. ஏராளமான அன்பர்களும் உறவினர்களும் வந்திருந்து சிறப்பித்தார்கள்.

— வாழ்க தம்பதிகள்!

   

செங்கற்பட்டு மாவட்டம் திருக்கழுக்குன்றம் ஸ்ரீ வேதகிரீஸ்வரர் தேவஸ்தானம் அர்ச்சகர் சிவஸ்ரீ T. A. முத்துவேதாசல குருக்கள் குமாரர் சிர: சுப்பிரமணியனுக்கு 2—6—76 புதன்கிழமையன்று திருக்கழுக்குன்றத்தில் ஆசார்யபிஷேகம் மிக சிறப்பாக நடைபெற்றது. அன்பர்களும், உறவினர்களும் வந்திருந்து விழாவைச் சிறப்பித்தார்கள்.

செங்கற்பட்டுமாவட்டம் திருக்கழுக்குன்றம் T. A. வேதாத்ரிகுருக்கள் குமாரி சௌ: ஸ்ரீமதிக்குப் ஷை யூர் T. M. வேதாத்ரிகுருக்க்ள் குமாரர் சிர: சிங்காரப்ரிய வர்தனனுக்கும். ஷை யூர் T. A. சுப்ரமணிய குருக்கள் குமாரி. சௌ: சா வி த் தி ரி க் கு ம், ஷை யூர் T. M. சோணாத்திரி குருக்கள் குமாரர் சிர; T S குணவர்த் தனனுக்கும், மப்பேடு மஹாதேவ குருக்கள் குமாரி சௌ: கல்யாணிக்கும் திருக்கழுக்குன்றம T. M. சோணாத்ரிகுருக்கள் குமாரர் சிர: பூர்ணானந்தனுக்கும் 9—7—76 புதன்கிழமையன்று இளையனூர் வேலூர் ஷண்முகசுந்தர குருக்கள் இல்லத்தில் முஹூர்த்தங் கள் மிக சிறப்புடன் நடைபெற்றது ஏராளமான அன் பர்களும், உறவினர்களும் வந்திருந்து முஹூர்த்தங் களைச் சிறப்பித்தார்கள். — வாழ்க தம்பதிகள்!

   

ஈரோடு ரயில்வேகாலனி ஸ்ரீகற்பகவிநாயகர் ஆலய அர்ச்சகர் சிவஸ்ரீ C.S. நடராஜ குருக்கள் 20-5-76ல் சிவபெருமான் திருவடி நிழலை அடைந்ததை முன் னிட்டு, அன்னாருடைய ஞாபகார்த்தமாக விநாயக சதுர்த்திவிழாக் குழுவினரால், நக்கீரதேவர் அருளிய "விநாயகர் அகவல்" என்ற மலர் வெளியிடப்பட்டது, இம்மலர்வேண்டுவோர் கீழ்க்கண்ட முகவரிக்குதபால் செலவுக்காக 25 பைசா ஸ்டாம்பு அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

K. பாலசுப்ரமணிய குருக்கள்

65, B. ஈஸ்வரன்கோயில் வீதி, கோட்டை, ஈரோடு—1



குடந்தை திருமுறைமன்றத்தின்சார்பாக சோமேஸ்வரர் திருக்கோயிலில் 21—1—76புதன்கிழமையன்று மன்றத்தின் செயலாளர் திரு. K. S. P. K. குஞ்சிதபாதம் செட்டியார் அவர்களுக்கு "திருமுறைச்செல்வன்" என்ற பட்டத்தை உயர்திருவாளர்: D, சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் பொன்னுடை போர்த்தி வழங்கினார்கள். விழாவிற்கு M.C.S ரெத்தினசபாபதி செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார்கள். ராமன் & ராமன் தொழிலதிபர் திரு. N. சேதுராமன் அவர்கள் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். திரு. P. T. S. சிங்காரம் செட்டியார் அவர்கள் திருமுறை வாணர்களுக்கு மலர்மாலையணிவித்தார்கள். K.S P.K. குஞ்சிதபாதம் தமக்களித்த பாராட்டுதலுக்கு நன்றி கூறினார்கள். மன்றத்தின் துணைத்தலைவர் K. Rm.S. இராமலிங்கம் செட்டியார் அனைவரையும் வரவேற்றார்கள். திருவாவடுதுறை ஆதீனம் இன்னிசை வேந்தன் D, சோமசுந்தர தேசிகர் அவர்கள் பாமாலைப் பாடிவழங்கினார்கள். E.T. சிதம்பரம் நன்றி கூற விழா சிறப்புடன் நடந்தேறியது.



| | | |
|---|---|---|
| 9—8—76 | திங்கட்கிழமை | ஆவணி அவிட்டம் |
| 10—8—76 | செவ்வாய்க்கிழமை | காயத்ரீஜபம் |
| 18—8—76 | புதன்கிழமை | கிருத்திகை |
| 28—8—76 | சனிக்கிழமை | விநாயக சதுர்த்தி |

## 12

மாலயன் தேட மறைதேட வானவர்தேடநின்ற
காலையுஞ் சூடகக் கையையுங் கொண்டு கதித்தகப்பு
வேலைவெங் காலனென் மேல்விடும்போது வெளிநில்
கண்டாய்
பாலையுந் தேனையும் பாகையும் போலும்
பணிமொழியே.

பாலையும் தேனையும் வெல்லப் பாகையும் போன்ற இனி மையையுடைய மெல்லிய சொற்களைப் பேசும் தேவி, திருமாலும் அயனும் தேடவும், வேதம் தேடவும், தேவர் தேடவும் அவர்களுக்கு அரியனவாய் நின்ற நின் திருவடிகளையும், வளையலணிந்த திருக் கரங்களையும் தாங்கியபடி, மேலெழுந்த மூன்று கிளைகளையுடைய வேலாகிய திருசூலத்தை யமன் என் மேல் விடும் அக்காலத்தில் என்முன்னே வெளிப்படையாக வந்து சேவை சாதித்தருள்வாயாக.

மொழிக்கு நினைவுக்கு மெட்டாத நின்றிரு
மூர்த்தியென்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற தால்விழி
யான்மதனை
அழிக்குந் தலைவ ரழியா விரதத்தை யண்டமெல்லாம்
பழிக்கும் படியொரு பாகங்கொண் டாளும்
பராபரையே

தம் நெற்றித் திருக்கண்ணால் மன்மதனை எரிக்கும் பரமே சுவரது அழிவில்லாத தவ விரதத்தை உலக முழுவதும் பழிக்கும்படி குலைத்து அவர் திருமேனியில் ஒரு பாகத்தைக் கைக்கொண்டு ஆட்சி செய்யும் பராபரையே, சொல்லுக்கும் எண்ணத்திற்கும் எட்டாத நின் திருவுருவமானது அடியேனுடைய கண்களுக்கும் பூசை முதலிய கிரியைக்கும் வெளிப்பட்டு நின்றது; இஃது என்ன ஆச்சரியம்!

பரமென் றுனையடைந் தேன்றமி யேனுமுன்
பத்தருக்குள்
தரமன் றிவனென்று தள்ளத் தகாது தரியலர்தம்
புரமன் றெரியப் பொருப்புவில் வாங்கிய போதிலயன்
சிரமொன்று செற்றகை யானிடப் பாகஞ் சிறந்தவளே

பகைவராகிய அசுருடைய முப்புரங்களும் அன்று எரியுமாறு மேருமலையாகிய வில்லை வளைத்த திருக்கரத்தானும், வெண்டாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனது தலையொன்றைத் தடிந்த திருக்கரத்தானுமாகிய சிவபிரானது வாம பாகத்தில் எழுந்தருளிய சிறப்புற்றாய். வேறொரு பற்றுக்கோடற்ற தமியேனாகிய யானும் உன் பாரம் என்று முறையிட்டு நின்னைப் புகல் அடைந்தேன்; 'நின் பக்தருக்குள் சேரும் தகுதியுடையவனல்லன் இவன்? என்று கருதி நீ தள்ளினால் அது நின் பெருமைக்குத் தகாது.

சிறக்குங் கமலத் திருவே நின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கந் தருநின் றுணைவரு நீயுந் துரியமற்ற
உறக்கந் தரவந் துடம்போ டுயிருற வற்றறிவு
மறக்கும் பொழுதென்முன் னேவரல் வேண்டும்
வருந்தியுமே.

சிறப்புற்ற தாமரையில் வீற்றிருக்கும் திருமகளாக உள்ள தேவி, நின் சிவந்த திருவடியைத் தன் சென்னியிலே ஒருவன் வைக்க அவனுக்கு மோட்ச பதவியைத் தரும் நின்னுடைய

தரியாகிய பரமேசுவாரும் நீயும் உடற்போடு உயிருக்கு உள்ள நட்பு அற்று அறிவு அழிந்து எல்லாம் மறக்கின்ற மரண காலத்தில் துரியம் கடந்த நிலையில் வரும் சிவானந்த அனுபவமாகிய தூக்கத்தைத் தரும்பொருட்டு எழுந்தருளி வந்து அங்ஙனம் வருதல் வருத்தம் தருவதாயினும் அவ்வருத்தத்தை ஏற்று அடியேனுக்கு முன்னே வந்து காட்சி கொடுத்தருளுதல் வேண்டும்.

வருந்தா வகையென் மனத்தா மரையினில்
வந்துபுகுந்
திருந்தாள் பழைய விருப்பிட மாக வினியெனக்குப்
பொருந்தா தொருபொரு ளில்லைவிண் மேவும்
புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தா னதைநல்கு மெல்லியளே

வானுலகத்தில் வாழும் தேவர்களுக்கு விருந்தாகப் பாற்கடலிலே பிறந்த அமுதத்தை வழங்கிய கோமளையாகிய தேவி அடியேன் ஜனன மரணங்களில் வருந்தாத வண்ணம் என் இருதய கமலத்தில் தானே வந்து புகுந்து அதுவே தன் பழைய இருப்பிடம்போல ஆகும்படி இருந்தாள்; இனிமேல் எனக்குக் கைவராத அரிய பொருள் ஒன்றும் இல்லை.

மெல்லிய நுண்ணிடை மின்னனை யாளை விரிசடை
யோன்
புல்லிய மென்முலை பொன்னனை யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணந் தொழுமடி யாரைத்
தொழுமவர்க்கு
பல்லிய மார்த்தெழ வெண்பக டூரும் பதந்தருமே.

மெல்லிய நுண்மையாகிய திருவிடை மின்னலைப்போல உள்ளவளை, விரிந்த சடாபாரத்தையுடைய சிவபிரான் தழுவிய மெல்லிய நகிலின் நிறம் பொன்னைப்போல இருப்பவளாகிய அபிராமியை வேதம் புகழ்ந்து சொல்லியபடி வழிபடும் அடியவர்களைத் தொழுகின்றவர்களுக்கு அத்தேவி பல வாத்தியங்கள் ஆரவாரித்து எழ வெள்ளை யானையின்மேல் ஏறிச் செல்லும் இந்திரபதவியை அருள் செய்வாள். (தொடரும்)

திருச்சிற்றம்பலம்

# திருநீற்றின் தெய்வ நலன்

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவர்கள்
சென்னை—2

## 3

பத்தியொடு சிவ சிவா என்றுதிரு நீற்றைப்
பரிந்துகை யாலெடுத் துப்
பாரினில் விழாதபடி அண்ணாந்து செவியொடு
பருத்தபுய மீது ஒழுக
நித்தமும்மூ விரல்களால் நெற்றியில் அழுந்தலுற
நினைவாய்த் தரிப்ப வர்க்கு
நீடுவினை அணுகாது தேகபரி சுத்தமாம்
நீங்காமல் நிமலன்அங் கே
சத்தியொடு சித்தம்விளை யாடுவன் முகத்திலே
தாண்டவம் செய்யும் திரு
சஞ்சலம் வராதுபர கதியுதவும் இவரையே
சத்தியும் சிவம்என்ன லாம்
மத்தினிய மேருஎன வைத்(து)அமுதி னைக்கடையும்
மால்மருகன் ஆனமுரு கா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. — குமரேச சதகம்

திருநீற்றை ஆள்காட்டு விரலால் தொட்டு பொட்டுபோல் பூசுதல் கூடாது. நெற்றி நிறையப் பூச வேண்டும்.

மார்க்கண்டேய மாமுனிவர் நீற்றினை நிறையப் பூசி நித்தமும் நியமத்துடன் சிவபூசை செய்தார். அதனால் மறலியை வென்றார் என்று அப்பரடிகள் கூறுகின்றார்.

நீற்றினை நிறையப்பூசி நித்தலும் நியமஞ் செய்தே
ஆற்றுநீர் பூரித்தாட்டும் அந்தனன் உயிரைக் காய்வான்
சாற்றுநாள் அற்றதென்றே தரும ராசற்காய் வந்த
கூற்றினைக் குமைப்பர் போலும் குறுக்கை வீரட்ட னுரே.

## தீ வை

சைவனுப் பிறந்து எவன் திருநீறு அணியாமல் மயானம்போல் செற்றியை வைத்துக்கொண்டிருக்கின்றுனே? அவனுடைய நெற்றியில் தீயை வை என்று பிருகத் ஜாபாலம் என்ற உபநிஷதம் முழங்குகின்றது.

திக் பஸ்ம ரஹிதம் பாலம்
திக் க்ராமம் ஆசிவாலயம்
திக் அநீசார்சனம் ஜம்ம
திக் வித்யாம் அசிவாச்ரயாம்

''திருநீறில்லாத நெற்றில் தீ வை''
''சிவாலயம் இல்லாத ஊரிலே தீ வை''
''சிவனை அர்ச்சிக்காத உடம்பிலே தீ வை''

''சிவபெருமானைக் கூருத சாத்திரத்திலே தீ வை'' என்பது பொருள்.

தீ வை யென்று கடுமையாகக் கூறுதல் கருணையாகுமோ? என்ருல் இது பிரபுத்வசம்மிதம். எஜமான் வேலைக்காரனுக்குக் கட்டளையிடுவது போலும் தந்தை மைந்தனுக்குக் கட்டளையிடுவது போலும் என வுணர்க. சேனைத் தலைவன் சேனைகளைப் பார்த்து

எவ்வாறு கட்டளை யிடுவானோ? அவவாறு அதிகா ரத் தொனியில் கட்டளை யிடுகின்றது.

ஒரு கணவன் மனைவியைப்பார்த்து, ''ஏ! பர தேவதையே! சாப்பிடும் பொருட்டு இலை போடுமாறு உன்னை பணிவன்புடன் வேண்டிக் கேட்டுக்கொள் கின்றேன்'' என்பது எத்துணைப் பொருந்தாமை எனவுணர்க.

வேதம், நாம் உய்யும் பொருட்டு கடுமையாகக் கட்டளை யிடுகின்றது எனவுணர்க.




## கறுப்பு வெப்பு

கறுப்பு என்றால் யாருக்கும் வெறுப்பாக இருக் கும். ஆடை வெண்மையாக இருக்கவேண்டும் என்று விரும்புகின்றோம்? பல் வெண்மையாக இருக்கவேண் டும் என்று விரும்புகின்றோம்? வீடு வெண்மையாக இருக்கவேண்டும் என்று சுண்ணும்பு அடிக்கின்றோம்

வெண்மையை யாரும் விரும்புவார்கள். முகம் வெண்மையாக விளங்கும் பொருட்டு சிலர் பொடி பூசிக்கொள்கிறார்கள். வெண்மையான விபூதியைப் பூசிக்கொண்டால், முகம் அழகாக இருக்கும். திரு நீற்றுச்சின்னம் நேற்றுச்சின்னமன்று, பிறவியை மாற்றும் சின்னம் என்று உணர்க.

## அதிசயமானது

உலகிலுள்ள பொருள்களை எரியில் சுட்டால் சங்கைத்தவிர மற்ற எல்லாப்பொருள்களும், கருமை

யாகி விடுகின்றன. வெள்ளைத் துணியை—வெள்ளைக் கடிதத்தை எரியில் யிட்டால் கரியாகிவிடுகின்றன. கரிய சாணத்தின் உருண்டையை எரியில் இட்டால் அது வெண்மையாகிறது. கருமை வெண்மையாக மாறிய திருநீறு, உள்ளக்கருமையை மாற்றி. ஞான வொளியை நல்குந், தெய்வத்தன்மை வாய்ந்தது. மனத்திலே உள்ளகருப்பு தீமை செய்யும் என்பதை,

''கைபோதி விளக்கேயென்ன மனத்திடை கருப்புவைத்து
பொய்த்தவ வேடங்கொண்டு புகுந்தனன் முந்திநாதன்''

என்ற பெரிய புராணத் திருவாக்கால் தெளிக. பசு என்ற சொல்லுக்கு, கட்டுப்பட்டது என்பது பொருள் பச் என்பது அதன் தாது. நாற்காற் பசு கட்டுப்பட்டிருக்கின்றது. இருகாற் பசுக்களான ஆன் மாக்களும் கட்டுப்பட்டிருக்கின்றன.

''அறம் பாவம் என்னும் அருங்க்யிற்ருல் கட்டி'' என்பது மணிவாசகர் திருவாக்கு.

நாற்காற் பசுக்களை ஒரு கயிற்ருல் கட்டியிருக் கின்ருேம். இருகாற் பசுக்களகன நமக்கு இரண்டு கயிறுகள் என்ருல் நாம் எத்துணை சாதுக்கள் என் பது புலனுகின்றதல்லவா?

அக்கினியால், பசுவின் மலம் வெந்து நீருகின் றது. அதுபோல் சிவாக்கினியால், ஆன்மாக்களின் ஆணவமலம் வெந்து தீருக வேண்டும். இந்நுட்பத் தைத் திட்டமாகத் தெறிவிப்பது திருநீறு.

(தொடரும்)




உ

சஞ்சீவி விநாயகா துணை

# சஞ்சலத்தை நீக்கும் சஞ்சீவி விநாயகர்

---

டாக்டர் சுவாமிநாத காசிநாதன் அவர்கள்,

பாண்டிச்சேரி—1



எக்காலத்திலும் மனிதன் நாடுவது மனச்சாந்தி. இச்சாந்தி ஆலயங்களுக்குச் சென்று தெய்வங்களை வழிப்பட்டால் ஏற்படுகிறது என்பதை நாம் அனுபவத்தில் கண்டிருக்கிறோம். ஔவையார் கூறியபடி ''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'' என்பதன் கூட ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்கவேண்டாம்'' என்ற பழமொழியும் தமிழ் நாட்டில் நிலவி வருகிறது. இப்படி கோயிலில் கவலையின்றி மனதை இறைவன்பால் செலுத்தமுடிகிறது. இறைவழிபாடு மனிதன் தோன்றிய காலந்தொட்டே உலகில் பரவி வந்திருக்கிறது. தன் மனதிற்கு எட்டாத, புரியாத ஒரு பரம்பொருளை அவனவன் விருப்பத்திற்கேற்ப பெயரிட்டு பலவித ஸ்வரூபங்களை கற்பித்து ஆராதித்து வந்தான். இதுதான் விக்ரஹ வழிபாட்டிற்கு வழிகோலியது என்று நாம் அனைவரும் அறிவோம்.

செந்தமிழ்ப் புதுவை நகரின் இணையற்ற அணிகலனாய் விளங்கி நிற்கும் தன்வந்தரிநகரில் ஸ்தாபிதமான ''ஜிப்பர்'' மருத்துவக்கல்லூரி மத்திய அரசாங்கத்தின் கீழ் செயல்பட்டு வருகிறது. அது கிழக்கு

ஆசியா நாடுகளிலே மாபெரும் ஆஸ்பத்திரிகளில் ஒன்று என்று அதைக்கண்டு சென்ற இந்திய, அந்நிய மாபெரும் மருத்துவர்களும் ஆன்ருேர்களும், சான்ருேர்களும் கூறியிருப்பதிலிருந்து தெரிகிறது. எந்த வியாதியினுல் பீடிக்கப்பட்டோரும் அங்கு சிகித்சைப்பெற்று குணமாகிச்செல்வதை கண்கூடாக பார்க்கிருேம்.

அந்த தன்வந்தரி நகரில், இந்த "ஜிப்மா" ஆஸ்பத்திரி உருவாவதற்கு முன்பு ஈண்டு ஒருசிலை இருந்தது. அச்சிலைதான் ஆதிசக்தி அருவமாக எழுந்தருளியதாம். தன்வந்தரி நகருக்கு பக்கத்திலுள்ள தட்டாஞ்சாவடி மக்கள் தங்கள் எல்லைத் தெய்வமாக அந்தச் சக்தியை வழிபட்டு வந்தனர். ஒரு சமயம், விறகு வெட்டியின் கோடாரி தற்செயலாக அருவமான அந்தச்சிலையில் பட்டதும், இரத்தம் பீரிட்டு வர, மக்கள் அந்தச்சிலையை தெய்வமாக வழிப்பட்டுவந்தனர். பல வருடங்களுக்குமுன்பு கம்பளி பரதேசி என்னும் பிரசித்திபெற்ற முனிவர் ஒருவர் இக்கோயிலுக்கு அருகே மடம் ஒன்றினை நிறுவி, தவவாழ்க்கையில் ஈடுபட்டிருந்தார். அந்த மடம் இன்றும் இருந்து வருகிறது. இந்த தன்வந்தரி நகரைச் சுற்றியுள்ள கிராம மக்கள், தாங்கள் எக்காரியத்தில் ஈடுபடுவதற்கு முன்பு இத்தேவதைக்கு பொங்கலிட்டு வணங்குவர். தெய்வீகசக்தி கொண்ட இப்புனித தலத்தில் மக்கள் வேண்டியது நிறைவேறியுது. சக்தி மிகுந்த அத்தேவதையின் பெருமையை உலகறியும் நேரம் வந்தது. இங்கு ஜிம்பரில் பணியாற்றும் அலுவலர்கள் குடியிருப்பு பகுதி

யான தன்வந்தரி நகரில், அம்பாள் தனிமையை விரும்பாததாலோ என்னவோ, தன் மைந்தன் கணபதியை வரவழைத்துக்கொண்டாள்.

ஆன்மீக அன்பர் பலர், அந்தக்கோயிலை புனருத்தாரணம் செய்து, முழுமுதற்கடவுளாம், மூலாதாரப்பொருளாம், பிரணவப்பேருருவாம், பெருந்தகை ஐங்கரன் சஞ்சீவி விநாயகன் என்ற பெயரில் கோயிலை, 1964ம் ஆண்டு காஞ்சி ஆசார்யாளுடைய பூர்ண ஆசியுடன் ஸ்தாபித்து, திருக்குட நன்னீராட்டு விழா நடத்தினர். ஸர்வ விக்னங்களையும் நிவர்த்திசெய்யும் இயல்புடையவர் விநாயகர் என்பது அனைவருக்கும் தெரிந்ததே.

துர்க்கைகூட பாண்டாசுரனை வதம்செய்ய கணேசனுடைய உதவியை நாடினார். அவர்தான் விக்ன யந்திரத்தை உடைத்தார். மஹா கணேச நிர்பின்ன விக்ன யந்த்ர பிரஹாஷிதாயை நம: என்று லலிதா சஹஸ்ரநாமத்தில் ஒரு அர்ச்சனைகூட இருக்கிறது. அம்பாளின் விக்னத்தையே உடைத்தெறிந்த விநாயகருக்கு நம் விக்னங்கள் என்ன பிரமாதம்?

தத்தித் தவழும் குழந்தையும் கொண்டாடும்
தன்னிகரில்லாத தன்வந்தரி நகரினிலே
தஞ்சமென்றுன்னைத் தாவிப்பிடித்துத் தழுவித்
தத்தம் உள்ளக்கோயிலிலிருத்திய
என் சஞ்சீவி விநாயகனே!

முன்னை பழமைக்கு பழமையாம்
பின்னை புதுமைக்கு புதுமையாம்
புதுவை தன்வந்தரி நகரினிலே
புதுக்கோயில் புகுந்த சஞ்சீவி விநாயகனே!

கல்வி கற்கும் இளநெஞ்சில்
கல்வி ஊற்றுப் பெருக்கெடுக்க
கற்பித்திடுவாய் கணபதியே!

அனைவரும் வளமுடன் அகிலமேல் நன்குமே
அன்புடன் இலகிட வேண்டினேன் உன்னையே
அஞ்சல் என்றருளிடும் ஐயனே! தேவனே!!
சஞ்சீவி விநாயகா! சரணமும் அடைந்தேன்.

என்று ஒருபக்தர் பாட தன்னை நாடிவரும் அனைவருக்கும் அருள்பாலித்து வருகிறார். உடற்பிணி, மனப்பிணி போன்ற அனைத்துப்பிணிகளும் போக்கும் சஞ்சீவியாக இருப்பது கண்டு, பக்தர்கள் பெருகினர்.

பிறகு பக்தர்கள் விருப்பப்படி, அருவமாக விளங்கிய ஆதிசக்தி அருகே துர்கா பரமேஸ்வரி அம்மனை ஒருபக்கமும், சஞ்சீவி பர்வதத்தை தக்க தருணத்தில் கொண்டுவந்து ஸ்ரீ ராம, லக்ஷ்மணருக்கு புத்துயிர் ஊட்டிய சமய சஞ்சீவியாகிய ஆஞ்சநேயர் மற்றொரு பக்கமும், 1968ம் ஆண்டு ஸ்தாபிக்கப்பட்டு மற்றொரு திருக்குடமுழுக்கு விழா நடைபெற்றது. துர்கா பரமேஸ்வரியை வழிபடுகிறவர்கள் என்றுமே அழியாத பலனைப் பெறுகின்றார்கள், கலியில் நடக்கும் தோஷங்களை அகற்றுபவளாவதால், அவளே "கலிகஷ்மஷ நாசினி" அந்த சாக்ஷாத் பரதேவதையின் சரணத்தை தியானம் பண்ணி சுத்தமான ஷேமத்தையும், ஆனந்தத்தையும் அடைவோம். மேலும் அனுமனை நினைத்தாலே, புத்தி, பலம், புகழ், தைரியம், பயமின்மை, ஆரோக்கியம், சொல்வன்மை ஏற்படும்.

இப்படி கடவுள் குடும்பம் படிப்படியாக பெருகி, 1974ம் ஆண்டு ஜூலைமாதம் 1ம் தேதி நவக்கிர ஹங்களை ஸ்தாபித்து ஒரு கும்பாபிஷேகம் செய்தார் கள் 10 ஆண்டுகளுக்குள் இது மூன்ருவது திருக்முட முழுக்கு. நவக்கிரஹங்களை வணங்கித் தொழுவதால் வரும் தீங்குகள் அறவே ஒழியவோ அல்லது அவை ளின் கொடுமைகள் ஒரளவு குறையவோ கூடும். என்பதாலேயே கோவில்களில் நவக்கிரஹத்தை பிர திஷ்டை செய்து நாம் வழிபட்டு வருகிரும் என்பது அனைவரும் அறிந்ததே. சிவபிரான் திருவடியைப் பிடிக்கும் அடியார்களுக்கு

''ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி பாம்பிரண்டு முடனே ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே'' என்று கோளாறு திருப்பதிகத்தில் பாடியிருப்பதிலிருந்து நவக்கி ரஹங்களின் மகிமை தெரிகிறது.

இப்படி தன்வந்தரி நகரில் தெய்வீக மணம்கமழ்ந்து சிறந்து விளங்குகிறது. இக்கோயிலில் வருடம்தோறும் விநாயகசதுர்த்தியின்பொழுது நடக்கும் லட்சார்ச்சனையும் நவராத்திரிகாலத்தில் நடக்கும் லலிதாசஹஸ்ரநாமம் அர்ச் சனையும். மார்கழிமாதத்தில் நடக்கும் உஷாக்கால பூஜை யும் மிகவும் சிறந்ததொரு முறையில் நடந்து வருகிறது. இந்த விழாக்காலங்களில் நடைபெறும் அலங்காரங்கள் மனதை ஈாக்கும், கண்கொள்ளாக்காட்சியாக இருக்கும்.

இதில் முக்கியமாக குறிப்பிடவேண்டிய விஷயம் யாதெனில் இங்கு படித்து பல்வேறுநாடுகளில் பணிபுரி யும் மாணவர்கள் இன்றும் தொடர்ந்து இவ்விழாக்களுக்கு தங்களாலான பொருளுதவிசெய்து வருகிருர்கள்.



உ

சிவமயம்

# சிவாகமம்

சிவஸ்ரீ: M. முத்தையா பட்டர் அவர்கள் திருச்செந்தூர்.

## ரக்ஷா பந்தனம்

ரக்ஷா என்பது எல்லாதோஷத்தையும் போக்கி சிவஞானப்பிரகாசத்தை உண்டாக்குவதால் ரக்ஷை யென இதற்கு திருநாமம் கூறப்படும்.

லோகத்திற்கு ஹிதத்தின் பொருட்டும் தேச க்ஷேமத்தின் பொருட்டும், எல்லாமங்கள காரியங்களி லும், ரக்ஷை செய்துகொள்ளவேண்டும்.

கலாகர்ஷணத்துக்குமுன் ரக்ஷாபந்தனஞ்செய்து கொள்ளல் வேண்டும். இராத்திரியிலேயே கலாகர்ஷ ணஞ் செய்தல் வேண்டும். இதற்கு முதல்நாளிலும் மறு நாளிலும், ரக்ஷாபந்தனஞ் செய்யக்கூடாது.

ஆசாரியருக்கு சர்வசாதகர் சக்ஷாபந்தனம் செய்து ஆசாரியரால் சர்வசாதகர் போதகர், சாத கர், ரித்விஜர் அர்ச்சகர் ஸ்தானீகர், பாசகர், பரி சாரகர், இவர்கள் யாவருக்கும்.

ரக்ஷாபந்தனஞ்செய்தல் வேண்டும். இவர்கள் ஆதி சைவர்களாகவே இருக்கவேண்டும். அன்னியர் கள் பிரதிஷ்டை முதலிய கிருத்தியங்கள் செய்யக் கூடாது, சர்வசாதகர், போதகர், சாதகர் சக்ஷை இல்லாமலுமிருக்கலாம் இவர்களுக்கு அசௌசம்வ

ரின் ரக்ஷை இல்லாதவரை நீக்க வேண்டிவரும், இதனால் ரக்ஷை இருந்தால் கிருஹித்துக்கொள்ள லாம்.

ஆதிசைவர் குலத்தில் உண்டானவரே சிவா கம படனம், மூலமந்திர பிராசாதமந்திர, அஸ்திர மந்திரங்களை ஜபித்தல் வேண்டும். அன்னியர்கள் செய்தால் தோஷமாய் முடியும். இவர்கள் ரக்ஷாபந் தனஞ் செய்துகொண்டு யாகசாலைக்குள் இருந்து ஜபம் செய்யலாம்.

நான்கு வேதங்களையும், அத்தியயனஞ் செய்ய ஆதி சைவர்கள் அல்லது மஹாசைவர் முதலிய பிராமணர்கள் பாராயணஞ்செய்யலாம். இவர்கள் ரக்ஷையோடு கூட அத்தியயனஞ் செய்தால் விசேஷ மாகும்.

திராவிடவேதமாகிய தேவாரத் திருமுறைகளுக் கும், ரக்ஷையோடு கூடி இருந்தல் விசேஷம்.

நர்த்தனம் செய்பவர்கள், வாத்தியம் வாசிப்ப வர்கள் இவர்கள் வாஸ்து சாந்திசெய்யும் சமயம், வாத்திய பூஜையில் ரக்ஷாபந்தனஞ் செய்துகொள்ள வேண்டும்.

யஜமானனுக்கு தனபூஜையின்போது ரக்ஷாபந் தனஞ் செய்தல்வேண்டும்.

இவர்கள் ரக்ஷையோடு கூடியிருந்தால் விசே ஷம் ஆசௌசம் பற்ருது இல்லையேல் நீக்குதல் வேண்டும் இதனுல் சர்வப் பிரயந்தினத்தினும் ரக்ஷா பந்தனஞ் செய்துகொள்ளவேண்டும்.

வேதாத்தியயனம் செய்பவர்கள் யாகசாலையின் வாசற் படிக்கு வெளியே இருந்து அத்தியயனஞ் செய்தல்வேண்டும். இவர்கள் வாசற்படிக்குள்ளே பிரவேசித்தால் ஸ்நபனம். சாந் திஹோமம் செய்தல்வேண்டும்.

## ரக்ஷா கும்பபூஜை.

வேதிகைக்குமேல் நடுக்கும்பத்தில் ஆதாராதிபத்மாசனம் பூஜித்து. ஆதிசேஷ ஆசனமூர்த்தி, மூலத்தால் பூஜித்து, தியானித்து அங்கங்களையும், பூஜித்து நெய்வேத்தியாதி உப சாரஞ்செய்து இதற்கு இடபாகத்திலுள்ள வர்த்தனியில் நாக கன்னிகையைப் பூஜித்து த்விதீயாவரணமாயுள்ள எட்டு கும் பங்களிலும் எட்டு நாகங்களை விதிப்படி பூஜித்து, திருதீயா வரணத்தின்பொருட்டு உரகாதி நாகங்களையும் சதுர்த்தா வரண பஞ்சமாவரணங்களை லோகபாலர்களையும், ஆயுதங் களையும், பூஜித்து, உபசாரங்கள் செய்யவும்,

இதற்கு கிழக்கில் எந்திரிகைக்குமேல் தாம்பாளத்தில் அரிசிவைத்து பத்மம் கற்பிமது தாமரைப்பூ பஸ்மம், பழம், வெல்லம், தேங்காய், வெற்றிலைப்பாக்கு, சந்தனம். அக்ஷதை பவித்திரம், மஞ்சள் கூர்ச்சம், பட்டு, தங்கம், வெள்ளி இவை களால்ச் செய்த ரக்ஷாசூத்திரம் வைத்து பூஜித்து ஏ! நாக நாகராஜாவே எல்லாக் கர்மங்களிலும் அசுத்தத்தை நிவர்த் தித்து சுத்திகரித்தர்ப் பொருட்டு ரக்ஷாபந்தனம் செய்கிறேன் அனுக்கிரஹம் புரிந்து என்னை ரக்ஷித்தல் வேண்டுமெனப் பிரார்த்தித்துக்கொள்ளவும்.

இதற்கு முன்னால் சதுரஸ்ரகுண்டத்தில் பாலாக்கினிவரை பூஜித்து சம்ஸ்காரஞ் செய்து நாகராஜனை ஆவாஹித்து ஆவர ணங்கள் பூஜித்து இந்த மந்திரத்தால் எல்லாத்திரவியங்களை யும் 1000/500/250 என்னும் சங்கைகளால் ஓமம் செய்து பூர்ணாகுதி செய்து ரக்ஷாசூத்திரத்தை வாகீஸ்வரிகர்ப நாடியில் உண்டானதாய் பாவித்து தூபதீப நெய்வேத்தியங் கொடுத்து சிவமூல மந்திரத்தால் விபூதி தடவி வேதகோஷம், மங்கள வாத்ய சங்கோஷம், சர்வவாத்தியம் முழங்க அகோர மந்திர முச்சரித்து ரக்ஷாபந்தனம் செய்து கொள்ளவேண்டும்.

(தொடரும்)

உ

காளி சரணம்



# ஸ்ரீ பத்ரகாளியம்மன் தேவஸ்தானம்,

## அம்பகரத்தூர்.

(பாண்டிச்சேரி மாநிலம்.)

இத்தலம் காரைக்கால் மாவட்டத்தில், பேரளத்திலிருந்து காரைக்கால் செல்லும் மார்க்கத்தில் உள்ளது. ஷ ஆலயத்தில் தினந்தோறும் 3 கால பூஜைகள் சிறப்புடன் நடைபெற்றுவருகிறது பிரதி ஆண்டு வைகாசி-மீ தோறும் இரண்டாவது செவ்வாய்கிழமையில் ஸ்ரீ காளியம்மன் திருவிழா மிக சிறப்பாக நடைபெறுகிறது இவ்வூரில் ஸ்ரீ பார்வதி அம்பாள் ஸமேத ஸ்ரீ பார்வதீஸ்வரஸ்வாமி ஆலயம், ஸ்ரீ விநாயகர் ஆலயம், ஸ்ரீ மஹா சாஸ்தா ஆலயம் ஸ்ரீ மாரியம்மன் ஆலயம், ஸ்ரீ வரதராஜப்பெருமாள் ஆலயம் ஆகியவைகள் இக்கோயிலின் உபகோயில்களாக நிர்வாகம் செய்யப்பட்டு வருகிறது. பிரதி ஆடி ௸ தை மாத கடைசி செவ்வாய்க் கிழமை தோறும் ஸ்ரீ அம்பாளுக்கு ஏகதின லட்சார்ச்சனை நடைபெறுகிறது. பக்தர்கள் வந்து தரிசித்து ஸ்ரீ அம்பாளின் திருவருளை அடையும்படி வேண்டிக்கொள்கிறோம்.

இங்ஙனம்,

அறங்காவலர் குழுவினர்.

---

N. B:— 10—8—76 செவ்வாய்க்கிழமையன்று வழக்கம் போல் ஏகதின லட்சார்ச்சனை நடைபெற ஏற்பாடாகி வருகிறது.

---

ஆசிரியரும், வெளியிடுபவரும் K. Y. சுந்தரேச குருக்கள்
96, சோலையப்பமுதலியார் தெரு கும்பகோணம்,
அச்சிடுபவர்: C. கலியபெருமாள் Prop: வேலன்பிரஸ், கும்பகோணம்